உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


துன்முகி - வைகாசி - 2016 - மே இதழ் - 47



சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


### பொருளடக்கம்




தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




பனிபடர் கயிலைப் பர்வதன் புதல்வி
படர்முகில் என்னப் பரவிய கூந்தல்
பவளக் காலடி பங்கயச் சேவடி
பைந்தமிழ்த் திருமுறை பாடிய காழி

நனிபுகழ் கொள்ள நண்ணிய ஞான
நாயகன் தோன்றி நற்றமிழ்ப் பதிகம்
நமக்கருள் செய்தான் நாடியே வளர்த்த
நறுந்தமிழ்ச் சைவப் பயிரது வளரத்

தனித்திரு நீற்றின் பெருமை உரைத்தோன்
தாயென விளங்கும் சமிவனத் தாயே
தண்மதுப் பொய்கை பண்படச் செய்த
தவளச் சிவனார் உவப்புறு பாவை

முனிவர் பற்பலர் முன்னித் தவம்செய்
முதிர்புகழ் வன்னி வனமது வந்து
முத்திக் கிறைஞ்ச முன்னருள் நெல்லை
முதல்வியுன் பாதம் பற்றினோம் முதலே !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

உணவைப் பழிக்காதீர்கள். உணவை வெறுக்காதீர்கள். உணவை அபரிதமாக உற்பத்தி செய்யுங்கள். உணவை வேண்டி வரும் யாரையும் உணவளிக்காமல் திருப்பி அனுப்பாதீர்கள். இயற்கையைப் பேணுங்கள். இயற்கை உங்களைக் காப்பாற்றும்.

இந்த வாக்கியங்கள் யாரோ ஒரு அறிஞர் கூறியவை அல்ல. பழங்காலத்தே பெயர் தெரியாத முனிவர்களும், ஞானிகளும் வாய்வழி, செவி வழியாகப் பாரம்பரியமாகச் சொல்லி வந்த உபநிஷத் - தைத்திரிய உபநிஷத்தில் காணப்படும் வாக்கியங்கள்.

ஆதிகாலத்தில் இருந்தே இயற்கையை மதித்து, இயற்கைக்குப் பயந்து, இயற்கையை அனுசரித்தே வாழ்ந்திருக்கிறார்கள். இயற்கைச் சீற்றங்களில் இருந்து நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். காப்பாற்றிக்கொள்ள முடியுமே ஒழிய எதிர்த்துச் செயல்பட இயலாது. எந்த விஞ்ஞானியும் இயற்கையை எதிர்த்து வெல்ல வழி வகுத்துத் தரவில்லை. செய்யவும் முடியாது. இயற்கையை வெல்ல யாராலும் முடியாது.

முற்காலத்தில் இயற்கையைப் போற்றி, யாகங்கள் செய்தார்கள். வழிபாடு செய்தார்கள். இயற்கை மக்களுக்கு நன்மை அதிகமாகச் செய்தது. முற்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் அதிக ஆண்டுகள் வாழவில்லை என்றாலும் வாழ்ந்த நாட்களிலே ஆரோக்கியமாக, ஆனந்தமாக வாழ்ந்தார்கள். இப்போது போல, கைப்பையில் முக்கால் பங்கு மாத்திரைகள் என்று, மாத்திரைகளும் உணவின் ஒரு பகுதியாக வாழவில்லை. எண்பது தொண்ணூறு என்று வாழ்கிறவர்களின் ஆனந்தமான ஆரோக்கியமான காலங்களைக் கணக்கிட்டால் நாற்பதும் முப்பதுமாகக் குறைந்துவிடும். கடவுளுக்கும், இயற்கைக்கும் அஞ்சுவது

போய் மருத்துவருக்கும், மருந்துக்கும் அஞ்சி வாழ்கின்ற வாழ்க்கை. ஆண்டுகள் எண்ணிக்கையிலே பயன் என்ன ?

நான் சிறுவனாக இருக்கும்போது வெய்யில் காலத்தில் வெளிப்பத்தியில் படுப்போம். அய்யா நடுவாசலில் இரண்டு நாற்காலிகளைப் போட்டுக் கட்டில் ஆக்கி அதிலே படுப்பார்கள். வியர்க்கும்போது பனை ஓலை விசிறிதான்; மின்விசிறி கிடையாது. மழைக்காலங்களிலே உள்பத்தியில் படுத்திருப்போம். படுதாக்கட்டிக் குளிரில் இருந்து காத்துக்கொள்வோம். வசதி காரணம் அல்ல; பழக்கமே காரணம். அப்படி வாழ்ந்ததனாலே எந்தச் சூழ்நிலையிலேயும் அவர்களாலே ஆரோக்கியமாக ஆனந்தமாக வாழ முடிந்தது. இன்று இயற்கைக் காற்று உடம்பில் படாதவண்ணம் அறையைச் சாத்திக்கொண்டு செயற்கை வசதிகளிலே வாழ்கிறோம். நம்மால் சில மணித்துளிகள் கூட வெளியில் வேலை செய்ய இயலவில்லை. இதற்கு வெய்யிலையும் மழையையும் குறை கூறிப்பயன் இல்லை.

காடு மரங்களை அழித்துவிட்டு மழை இல்லை எனக் கதறுகிறோம். அரசாங்கத்தைக் குறை கூறுகிறோம். வரத்துக் கால்வாய், போக்குக்கால்வாய் அனைத்தையும் அடைத்து வீடு கட்டிக்கொண்டோம். கண்மாயை மனை பிரித்துக் கட்டிடம் கட்டி வாழ்கிறோம். பின்னர் வெள்ளம் வீட்டுக்குள் வந்துவிட்டது என்று அலறுகிறோம். சற்றே சிந்தியுங்கள் யார் காரணம் ? எது காரணம் ?

பதினைந்து நாட்களுக்கு முன் அக்கினி நட்சத்திரத் தொடக்கத்தில் ஆ, ஊ வெய்யிலின் கொடுமை தாங்க முடியவில்லை என்று பதறினோம். இப்போது இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து மழை பெய்யும்போது ஐயோ! ஐயோ! போன வருடம் போல் வெள்ளம் வந்து விடுமோ என்று சென்னையில் உள்ளவர்கள் அஞ்சுகிறார்கள். இவற்றிற்கு எல்லாம் யார் காரணம் ? எது காரணம் ?

தனி மனிதப் பேராசை ஒன்றே காரணம். சுயநலம் மிகுந்து பொதுநலம் குறைந்து காணப்படுவதே காரணம். மக்களால் நான் மக்களுக்காக நான் என்று சொல்கின்ற அரசியல்வாதிகளோ, அதிகாரிகளோ உங்களைக் காப்பாற்றப் போவதில்லை. உங்களை நீங்கள் தான் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இயற்கை தான் உங்களைக் காப்பாற்ற முடியும்.

சமீபத்தில் ஜப்பான் விஞ்ஞானி ஒருவர் இன்னும் இருபது, முப்பது ஆண்டு காலத்திற்குள் இந்தியாவில் வறட்சியால் ஏற்படும் பாதிப்பு அதிகமாகும். மற்றைய துறை வளர்ச்சிகளையும் அது பாதிக்கும் என்று எச்சரித்து உள்ளார். எனவே, இந்தச் சூழ்நிலையிலே நாம் நம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கத் தொடங்குவோம். எதையும் அவசர காலக் கோஷங்களாக மட்டுமே இல்லாமல் செயலாக மாற்றுங்கள். நிலங்களில் பண்ணைக்குட்டை அமையுங்கள். மரங்கள் வளர்ப்போம். பத்து ஏக்கர் நிலம் உள்ளவர் ஐந்து சென்ட் இடத்தில் குட்டை அமைக்க முடியும். நீர் வளத்தை மேம்படுத்த முடியும். விளைச்சலைப் பெருக்க முடியும். அதே போல நீர்நிலைகளைப் பாழ்படுத்தாதீர்கள். பாழ்படுத்த அனுமதிக்காதீர்கள். அரசியல் வாதிகள், அதிகாரிகளின் நேர்மையற்ற வியாபாரிகளின் பண்பாடற்ற செயல்களை, பொதுநலனுக்கு எதிரான செயல்களைத் தடுத்து நிறுத்துங்கள். இதற்குத் தேவை மக்களின் நேர்மையும் நெஞ்சுரமும் ஒற்றுமையும்.

ஒற்றுமையாக வாழ்வோம். இயற்கையோடு இணைந்து வாழ்வோம். நம் வாழ்வாதாரங்களைக் காத்துக் கொள்வோம். நம்மை நாமே காப்பாற்றிக் கொள்வோம்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

# மடாலய நிகழ்வுகள்

கோவிலூர் மடாலயத்தின் சார்பில் நடைபெற்ற கைவல்ய நவநீதம் இரண்டாவது மாநில மாநாடு 06.05.2016 அன்று தொடங்கியது. காலை 9.50 மணி அளவில் குத்துவிளக்கு ஏற்றிவைத்துத் தொடங்கிய விழாவில் முற்பகல் கைவல்ய நவநீத முற்றோதல் நிகழ்ந்தது. ஏராளமான வேதாந்த அன்பர்களும் பேராளர்களும் பெருமக்களும் கலந்து கொண்டனர்.

நண்பகல் உணவு இடைவேளைக்குப் பிறகு பிற்பகல் 2.45 மணி அளவில் காரைக்குடி நகரச் சிவன் கோவில் நாதஸ்வர வித்துவான் திரு. நாகலிங்கம் குழுவினரின் மங்கல இசை நிகழ்ச்சி நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து பிற்பகல் 3.30 மணி அளவில் மாநாட்டுத் தொடக்கவிழா அமைந்தது. செல்வியர் கவிதா, கவிச்சித்ரா இறைவணக்கம் பாடினர். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். மாநாட்டின் நோக்க உரையைக் கவிஞர். நீ. இரவிச்சந்திரன் வழங்கினார்.

மாத்தூர் நகரச் சிவன் கோவில் அறங்காவலர் உயர்திரு ஆறு.அ.ராம.சொ.ராம. அருணாச்சலம் முன்னிலை வகித்தார். சன்மார்க்க தேசிகர் தவத்திரு ஊரன் அடிகள் மாநாட்டைத் தொடங்கி வைத்துச் சிறப்புரை ஆற்றினார்.

சென்னை, கைவல்ய நவநீதப் பெருமன்றத்தின் தலைவர் தவத்திரு. பெருவெளி. ராமன் அவர்கள் அஷ்டா வக்கிரர் காட்டும் அத்வைதம் என்னும் தலைப்பிலும் தவத்திரு சுவாமி வேதானந்தனார் அவர்கள் ஜீவனும் ஈசனும் என்ற தலைப்பிலும் காரைக்குடி கம்பன் கழகச் செயலர் கம்பன் அடி சூடி பழ. பழனியப்பன் அவர்கள் கம்பனில் அத்வைதம் என்ற தலைப்பிலும் சொற்பொழிவாற்றினார். இரவு உணவுக்குப் பின் சத்சங்கம் நிகழ்ந்தது.

07.05.2016 அன்று முற்பகல் மாநாட்டின் இரண்டாம் நாள் நிகழ்ச்சி நடைபெற்றது. காலை 5 மணிமுதல் 7 மணி வரை கைவல்ய

நவநீதம் முற்றோதல் நிகழ்ந்தது. முற்பகல் நிகழ்ச்சி 8.30 மணிக்கு இறைவணக்கத்துடன் தொடங்கியது. பாடிய நல்லூர் விபுவித்யாபீடம் ஆத்ம போதகர் தவத்திரு ஜவஹர் சுவாமிகள் தலைமை ஏற்றுச் சிறப்புரை வழங்கினார். அருப்புக்கோட்டை, மலையரசன் கோவில் வேதாந்த ஞான சபையின் ஞானகுரு தவத்திரு மா. கந்தன் (எ) கந்தசாமி. மகாவாக்கிய விசாரணை என்ற தலைப்பிலும் தவத்திரு உடுமலைப்பேட்டை தங்கவேல் பஞ்சகோஷ விவேகம் என்னும் தலைப்பிலும் ராஜபாளையம் வேலாயுதராஜா வேதாந்த பாடசாலையைச் சார்ந்த தவத்திரு கோ. பூமிநாதன் தாயுமானவர் பாடல்களில் அத்வைதம் என்னும் தலைப்பிலும், தவத்திரு பாரதிப்பித்தன் தாண்டவராயரும் மாணிக்கவாசகரும் என்ற தலைப்பிலும் உரையாற்றினர். தவத்திரு பாலசுப்பிரமணியன் கைவல்ய நவநீதப் பாடல்கள் குறித்துப் பேசினார். ஊத்துக்குளி ஜமீன் தவத்திரு. மாணிக்க தாயம்மாள் எழுதி அனுப்பிய உரைப்பகுதியை உடுமலைப்பேட்டை தங்கவேல் வாசித்தார்.

07.05.2016 அன்று பிற்பகல் கைவல்ய நவநீத இரண்டாவது மாநில மாநாட்டின் இரண்டாம் நாள் பிற்பகல் நிகழ்ச்சி இறைவணக்கத்துடன் தொடங்கியது.

திருவாரூர் ஸ்ரீதட்சிணாமூர்த்தி மடத்தின் வேதாந்த குரு தவத்திரு காத்த பெருமாள் தலைமை ஏற்றுச் சிறப்புரை வழங்கினார். ராஜபாளையம் வேலாயுதராஜா வேதாந்த பாடசாலையின் தலைவர் தவத்திரு. கல்யாண வெங்கட்ராமன் முன்னிலை வகித்தார். கோவிலூர் மடாலயம் வேதாந்தி தவத்திரு. வெங்கட்ராமன் விடயமன் என்னும் தலைப்பிலும் விருதுநகர் கைவல்ய நவநீத சங்கத்தைச் சார்ந்த தவத்திரு. தங்கவேல் சாதனங்கள் இன்றி ஒன்றைச் சாதிப்பார் என்ற தலைப்பிலும் திருவாரூர், பிரம்ம வித்யா பீடத்தின் தலைவர் தவத்திரு. வேணுகோபால் சுவாமி ஜீவன்முக்தர்களும் விதேக முக்தியும் என்னும் தலைப்பிலும் ஆண்டிப்பட்டி ஞானாச்சாரியார் தவத்திரு. கிருஷ்ணசாமி கைவல்ய நவநீதமும் பகவத் கீதையும் என்ற தலைப்பிலும் புலவர் முத்துசண்முகம் ஆத்ம முக்தம் என்னும் தலைப்பிலும் ராஜபாளையம் வேலாயுத ராஜா வேதாந்த

பாடசாலையைச் சார்ந்த திருமதி சுதா கைவல்ய நவநீதமும் திருவாசகமும் என்னும் தலைப்பிலும் சிறப்புரை ஆற்றினர். இரவு உணவுக்குப் பின்னர் சத்சங்கம் நடைபெற்றது.

08.05.2016 அன்று மாநாட்டின் மூன்றாம் நாள் நிகழ்ச்சி கைவல்ய நவநீதம் முற்றோதலுடன் தொடங்கியது. காலை 5.00 மணிமுதல் 7.00 மணி வரை முற்றோதல் நிகழ்ந்தது. 8.30 மணிக்குச் சொற்பொழிவு நிகழ்ச்சி இறைவணக்கத்துடன் தொடங்கியது. போடிப்பாளையம், கைவல்ய நவநீத சங்கத்தின் ஆத்ம போதகர் தவத்திரு. இல. மனோகர் ஞானம் மெய் மகனே நம் ஆணை மறந்திடாதே என்னும் தலைப்பினில் தலைமை உரை நிகழ்த்தினார். திருநெல்வேலி, புதுக்குடி, இடைக்கால் தவத்திரு இ.மா. சுப்பிரமணியன் கைவல்யம் காட்டும் ஆரோபமும் அபவாதமும் என்னும் தலைப்பிலும் வீரபாண்டி பிர்மகுகா சபையின் ஞானாச்சார்யார் தவத்திரு. இராதாகிருஷ்ணன் கண்ணனுக்குப் பிடித்தவர்களும் கண்ணனைப் பிடித்தவர்களும் என்ற தலைப்பிலும்.

விருதுநகர், கைவல்ய மாதர் சங்கத்தின் தலைவர் தவத்திருமதி மகாலெட்சுமி கீதாச்சாரத் தாலாட்டும் கைவல்ய நவநீதமும் என்ற தலைப்பிலும், பாடிய நல்லூர் தவத்திரு கு. தியாகராஜன் கைவல்ய நவநீதம் அன்று முதல் இன்று வரை என்ற தலைப்பிலும் கோவிலூர் வேதாந்தி தவத்திரு நீ. இரவிச்சந்திரன் பாரதியும் அத்வைதமும் என்னும் தலைப்பிலும் பாதரக்குடி மடம் தவத்திரு ரவீந்திர சுவாமிகள் கைவல்ய உபநிஷத்தில் நடைமுறை வேதாந்தம் என்னும் தலைப்பிலும் உரையாற்றினார்.

08.05.2016 அன்று பிற்பகல் மாநில மாநாட்டின் நிறைவுவிழா நிகழ்ச்சி இறைவணக்கத்துடன் தொடங்கியது. தவத்திரு முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன் நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்று உரையாற்றினார். குடியாத்தம் தவத்திரு பெ.சி. இராமலிங்கம் குருவும் சீடனும் என்ற தலைப்பிலும் அருப்புக்கோட்டை, மலையரசன் கோவில் வேதாந்த ஞானசபைச் செயலர் தவத்திரு சி. பால்ராஜ் தசமன் நீயே என்னும் தலைப்பிலும் உரையாற்றினர். கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் மாநாட்டின் தொகுப்புரையை

வழங்கினார். தேனி, சித்பவானந்தா ஆஸ்ரமம், ஆதீனகர்த்தர் தவத்திரு பூஜ்ய ஸ்ரீ சுவாமி ஓங்காரானந்தா மாநாட்டு நிறைவுரை வழங்கி ஆசிகள் கூறினார். தவத்திரு பிரணவானந்தா தவத்திரு ஊரன் அடிகள் உட்பட அன்பர்கள் பலர் கலந்து கொண்டனர். புலவர் முத்து சண்முகம் நன்றி கூற மாநாட்டு நிகழ்ச்சிகள் நிறைவுற்றன.

மூன்று நாள் மாநாட்டு நிகழ்ச்சிகளில் மடாலய நிறுவன அலுவலர்களும் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் அனைவரும் முழு ஈடுபாட்டோடு பணி செய்து நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெறத் துணை புரிந்தனர்.

04.05.2016 அன்று பூஜை பழனியப்ப ஐயா குருபூசையும் 06.05.2016 அன்று கோட்டையூர் அழகப்ப அய்யா குருபூசையும் 07.05.2016 அன்று மகா வெங்கடாசலம் அய்யா குருபூசையும் சிறப்பாக நடைபெற்றன.

## தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதய்யர்

(நன்றி, செம்மொழித் தமிழ் உயராய்வு மையம்)

இன்றைய திருவாரூர் மாவட்டம் உத்தமதானபுரம் என்கிற சின்னஞ்சிறு கிராமத்தில் 19.02.1855 அன்று பிறந்தார் நம் தமிழ்த்தாத்தா. அவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் வேங்கடராம சர்மன். சுற்றத்தார் அவரைச் சாமா என்றே அழைத்தனர். திருவேரகத்திலுள்ள சுவாமிநாதன் என்பதைச் சுருக்கியே சாமா என்றழைத்தனர்.

குன்னம் சிதம்பரம்பிள்ளை, கார்குடி கஸ்தூரி அய்யங்கார், செங்கணம் சின்னப்பண்ணை விருத்தாச்சல ரெட்டியார் போன்ற பல அறிஞர்களிடம் பாடம் கேட்டு வளர்ந்த சாமாவின் உள்ளத்தில் தமிழ்ப் பசி தீயெனப்பற்றிக் கொண்டது. அந்நாட்களில் திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக இருந்த மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களின் புலமையும் புகழும் எங்கும் பரவியிருந்தது. அவரிடம் சென்று பாடம் கேட்க ஆவல் கொண்ட

சாமாவை அவருடைய தந்தையார் பிள்ளையவர்களிடம் அழைத்துச் சென்றார். அவரைக் கண்ட காட்சியைப் பற்றி என் சரித்திரத்தில் உ.வே.சா. எழுதுகிறார் இவ்வாறு.

பல காலமாகத் தவம் புரிந்து ஒரு தெய்வ தரிசனத்திற்குக் காத்திருக்கும் உபாசகனைப் போல நான் இருந்தேன். அவனுக்குக் காட்சியளிக்கும் அத்தெய்வம் போல அவர் வந்தார். என் கண்கள் அவரிடத்தே சென்றன. என் மனதில் உற்சாகம் பொங்கி அலை எறிந்தது. அதன் விளைவாக ஆனந்தக்கண்ணீர் துளிர்த்தது.

இத்தகைய உயர்வான இடத்தில் அவர் வைத்துக் கொண்டாடிய பிள்ளையவர்களிடம் பாடம் கேட்கத் துவங்கினார். சைவப்பழமாகிய பிள்ளையவர்கள் உமக்கு வேங்கடராமன் என்று ஏன் பெயர் வைத்தார்கள் என்று கேட்டு இனிமேல் சாமிநாதன் என்ற பெயராலேயே உம்மை அழைக்கலாம் என்று நினைக்கிறேன் என்று வேங்கடராமனைச் சாமிநாதனாக நமக்கு மாற்றித் தந்தார். மிகச் சிறந்த மாணாக்கராகவும் பிள்ளையவர்களின் அன்புக்குப் பாத்திரமான சீடராகவும் அய்யர் பாடம் கேட்டார்.

அக்கால வழக்கப்படி 13 வயதிலேயே அய்யர் அவர்களுக்கும் மதுராம்பாள் அவர்களுக்கும் திருமணம் நடைபெற்றது. அப்போது திருவாவடுதுறை ஆதீனகர்த்தராக இருந்தவர் திருகூடராசப்பக் கவிராயரின் வழித்தோன்றலான சுப்பிரமணிய தேசிகர் ஆவார். அவர் அய்யர் அவர்களின் புலமை மீது மதிப்பு கொண்டு அவரை ஆதினத்திலேயே தங்கியிருந்து தம்பிரான்களுக்குப் பாடம் சொல்லக் கேட்டுக்கொண்டார். அங்கேயே ஒரு புதிய வீட்டில் தன் துணைவியாருடன் சாமிநாதய்யர் வசிக்கத் துவங்கினார். அச்சூழலில் பெரும்புலவர் பெருமான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் காலமானார்.

கும்பகோணம் வாழ்க்கையின் போதுதான் ஒரு முக்கியமான நிகழ்வு அய்யர் அவர்களின் வாழ்க்கையில் நடந்தது. சேலம் இராமசாமி முதலியார் என்பவர் கும்பகோணத்திற்கு முன்சீப்பாக உத்தியோகம் பெற்று வந்தார். 21.10.1880 அன்று சுப்பிரமணிய தேசிகர் அவர்களின்

அறிவுறுத்தலின்படி அய்யர் அவர்கள் சேலம் ராமசாமி முதலியாரைச் சந்தித்தார். என்ன என்ன படித்திருக்கிறீர்கள் ? என்று அவர் கேட்டபோது அய்யர் தாம் படித்த அந்தாதி, கோவை, பிள்ளைத்தமிழ் நூல்களை எல்லாம் வரிசையாக ஒப்பித்தார். இவற்றையெல்லாம் படித்து என்ன பிரயோசனம் என்று அவர் கேட்க மேலும் தான் படித்த நூல்களின் பட்டியலை அய்யர் வாசித்தார். கம்பராமாயணத்தைப் படித்துள்ளதாகவும் சொன்னார். இவை எல்லாம் பிற்காலத்து நூல்கள்தாமே ? பழங்காலத்து நூல்களான சங்கப் பாடல்களைப் படித்திருக்கிறீர்களா ? சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றைப் படித்ததுண்டா ? என்று ராமசாமி முதலியார் அவர்கள் கேட்டார்.

நம் தமிழ் இலக்கிய வரலாற்றின் திசைவழியைத் தீர்மானித்த கேள்வியாக அது அமைந்தது. அதன் பிறகுதான் அய்யர் அவர்களின் வேட்டை துவங்கியது. ராமசாமி முதலியாரே அப்பணியைத் துவக்கியும் வைத்தார். சீவக சிந்தாமணியின் கடிதப்பிரதி ஒன்றை அய்யருக்கு அவரே அளித்தார். சமண இலக்கியமான சீவக சிந்தாமணியைத் தெளிவுறப் புரிந்து கொண்டு பதிப்பிக்கும் நோக்கில் சமண சம்பிரதாயங்களைக் கும்பகோணத்தில் இருந்த சமணர்களிடம் சென்று பாடம் கேட்டுத் தெரிந்து கொண்டார் அய்யர்.

அதன் பிறகே சென்னை சென்று சீவகசிந்தாமணியைப் பதிப்பித்தார். அந்நூலின் வரவு தமிழகத்தில் ஒரு புது மலர்ச்சியை உண்டாக்கியது. சீவக சிந்தாமணியைத் தொடர்ந்து பத்துப்பாடலைப் பதிப்பிக்கும் பணியைக் கையிலெடுத்தார். அதையடுத்துப் புறநானூறு, மணிமேகலை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு எனத் தம் பதிப்புப் பயணத்தைத் தொடர்ந்தார்.

அரசாங்கத்தாரும் கிருத்துவ மிசனரிமார்களும் மட்டுமே பயன்படுத்தி வந்த அச்சு இயந்திரத்தை 1835ஆம் ஆண்டு முதல் இந்தியர்களும் பயன்படுத்தலாம் என்று சட்டம் இயற்றப்பட்டதைத் தொடர்ந்தே ஓலைச் சுவடிகளாக இருந்த தமிழ் நூல்கள் பல அச்சுப்புத்தகங்களாக வரத்துவங்கின. எழுதா எழுத்து என்று தமிழ்ப்புலவர்கள் அவற்றை வரவேற்று மகிழ்ந்தனர்.

சங்க இலக்கியங்கள், காவியங்கள் என 1878ஆம் ஆண்டு துவங்கி 1942ஆம் ஆண்டு வரை அறுபத்திரண்டு ஆண்டு காலம் 102 நூல்களை உ.வே.சா. பதிப்பித்தார். இப்படி ஒரு வரியில் இன்று நாம் எளிதாக எழுதி விட முடிகிறது. ஆனால் அன்று உ.வே.சா. இந்த ஓலைச்சுவடிகளைத் தேடி ஊர் ஊராக அலைந்தார். ஒரு பிச்சைக்காரரைப் போல அச்சுவடிகள் இருந்த வீடுகளின் வாசல்களில் கையேந்தி நின்றார். பலர் கொடுத்தார்கள். பலர் அவமதித்தார்கள். இரண்டையும் சமமான மனநிலையுடன் ஏற்றுக் கொண்டு பணி செய்தார்.

தூத்துக்குடி, திருநெல்வேலி, மழவராயனேந்தல், மதுரை, ஆழ்வார், திருநகரி, தென்காசி, திரிசிரபுரம், வடூர், சேலம், சென்னை என வெவ்வேறு திசைகளுக்கும் சென்று ஏழைக் கவிராயர்களின் வீடுகளிலிருந்து உ.வே.சா. பழந்தமிழ் ஏடுகளை வெளிக்கொணர்ந்தார். அக்கவிராயர்களின் வீடுகளே கோயில்கள் என்றும் அங்குள்ள ஏடுகளே விக்கிரகங்கள் என்றும் போற்றினார் உ.வே.சா.

சுவடிகளைத் தேடுவது ஒரு போராட்டம் எனில் அவற்றைப் பதிப்பிப்பது அடுத்த பெரிய போராட்டம். ஏனெனில், ஒரு நூலைப் பாடிய புலவர் தம்மிடம் பாடம் கேட்கும் மாணவர்களுக்கு அதைச் சொல்லிக்கொண்டே வருவார். அவர்கள் அதை ஏட்டுச்சுவடியில் எழுதுவார்கள். இடையிடையே ஆசிரியர் கூறும் மற்ற செய்திகளையும் அவர்கள் இரண்டு இரண்டு வரிகளுக்கிடையே எழுதி வைத்துக் கொள்வதும் உண்டு. மற்றவர்கள் அதைப் பார்த்துப் பிரதிசெய்து கொள்ளும்போது அந்தக் குறிப்புகளையும் பழைய மூலத்தோடும், உரையோடும் சேர்த்து எழுதிவிடுவார்கள். இதே போன்று எழுதுவதில் ஏராளமான பிழைகள் ஏற்படும். சுவடிகளில் மேற்கோள் செய்யுள்களைப் பிரித்து அறிவதும் கடினம்; உரை இல்லாத மூலங்கள் எழுத்தும், சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டிருக்கும். சில சுவடிகள் சிதைந்தும் கிடைக்கும்.

மிகுந்த பொறுமையுடனும் பொறுப்புடனும் வேறு பிரதிகளுடனும் உரையாசிரியர் குறிப்புகளுடனும் ஒப்பிட்டுப் பார்த்து இரவு பகலாக உழைத்து மெய்ப்புத் திருத்தி நம் உ.வே.சா. இப்பதிப்புகளைக் கொண்டு வந்தார்.

1903ஆம் ஆண்டு சென்னை மாநிலக்கல்லூரியில் பேராசிரியராகப் பொறுப்பேற்று அதன் பிறகு சென்னையில் குடியேறி, கல்லூரிப் பணியையும், பதிப்புப்பணியையும் தொடர்ந்தார்.

தம் வாழ்க்கைச் சரிதத்தை என் சரித்திரம் என்கிற தலைப்பில் ஆனந்த விகடன் இதழில் எழுதத் துவங்கினார். அவரே அதை எழுதாமல் போயிருந்தால் அவர் பட்ட இன்னல்களும் அவர் உழைப்பின் பரிமாணமும் நமக்குத் தெரியாமலே காலத்தில் கரைந்து போயிருக்கும். 1942 ஏப்ரல் மாதத்தில் அவர் காலமானதால் அவரது என் சரித்திரம் முற்றுப் பெறாமலே நின்று விட்டது.

இத்தனை வலிகளைச் சுமந்து அவர் பதிப்பித்த நூல்களை வாசிக்கக் கூட ஆர்வமின்றி நாம் இருக்கலாகுமா என்கிற கேள்வியைப் பணிவுடன் தமிழ்ச்சமூகத்தின் முன் வைக்கிறோம். நம் எல்லோரும் சேர்ந்து உ.வே.சா. வைக் கொண்டாடுவது என்பதன் உண்மையான பொருள் அவர் பதிப்பித்த இலக்கியங்களை வாங்கி வாசிப்பதில்தான் அடங்கியிருக்கிறது.

1906ஆம் ஆண்டு அய்யர் அவர்கள் மகா மகோபாத்தியாய பட்டம் பெற்ற போது பாரதியார் அவரைப் போற்றி எழுதிய பாடலின் வரிகள்

நிதியறியோம், இவ்வுலகத் தொருகோடி
　　இன்பவகை நித்தம் துய்க்கும்
கதியறியோம் என்றுமனம் வருந்தற்க
　　குடந்தைநகர்க் கலைஞர் கோவே,
பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
　　காலமெலாம் புலவோர் வாயில்
துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்
　　இறப்பின்றித் துலங்கு வாயே

பாரதியின் வாக்குப்படி தமிழ்த்தாத்தா தமிழர்களின் நெஞ்சில் என்றென்றும் மங்காப் புகழுடன் வாழ்கிறார்; வாழ்வார்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

### (காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

அடுத்து அருளுடையோரைத் தெளிந்தறிவது எவ்வாறு என்பதை விளக்க முற்படுகின்றார். ஒருவர் செய்கின்ற செயல்கள் மூலமாக அவர் பொருளுடையோர் என்பதை அறியலாம். போர்க்களத்தில் காட்டும் ஆற்றலைக் கொண்டு அவன் வீரன் என்பதை அறியலாம் மயக்கம் உடைய வரை அவரது முகமே காட்டிவிடும். அதுபோலத் தவமுடைய பெரியோர்களை அவர்களது தவத்தினால் அறியலாம்.

சில மனிதர்கள் இப்பூமியில் இருக்கத் தகாதவர்; பருத்திப் பஞ்சைவைத்த தலையணை போலப் பருக்க அறுசுவையோடு உண்ணும் மாந்தர் முற்றும் துறந்த முனிவர்களுக்கு உணவிட மாட்டார். அத்தகையோரை இப்பூமியில் ஏன் வாழ வைத்துக் கொண்டிருக்கிறாய் ?

வேண்டாத இருளை அகற்றும் சூரியக்கதிர் கூகைகளின் கண்களுக்குப் புலப்படாது. உள்ளத்தே மயக்கம் உடையோர் அறிய மாட்டார். எல்லாம் அறிந்தவரைப் போன்றிருத்தல் வெளிமயக்கே. வாது செய்வார். பின்னர்ச் சண்டைக்குப் போவார். வல் வழக்காடுவர். தீமை செய்வோருக்கும் உதவி செய்வார். விதி முடியும்வரை மாதரொடு கூடிக்களிப்பார். இறைவா ! எதற்காக இவர்கள் பூமியில் பிறந்தார்கள் ?

ஓயாமல் பொய் சொல்வதும் நல்லோரை நிந்திப்பதும் உற்றுப் பெற்ற தாயினைக் கீழ்த்தரமாக வைவதும் பிறர்க்குச் சதி செய்வதும் சாத்திரங்களை அறியாமலும் பிறருக்கு உதவி செய்யாமலும் தம்மை நெருங்கிய பேர்களுக்கு ஒன்றை ஈயாமலும் உள்ளவர் இருந்தாலும் ஒன்றுதான்; இறந்தாலும் ஒன்றுதான்.

தண்ணீர் வெண்மையாக இருப்பினும் சேர்ந்த மண்ணின் இயல்பைப் பெற்றிருப்பது போல ஒரு மனிதனுடைய குணமும் அவன் சார்ந்த மனிதர்களின் குணத்தை ஒத்திருக்கும். நாயாய்ப் பிறந்தால் அது வேட்டையாடி மாதர்களுக்கு உதவும். ஒரு தாயின் வயிற்றில் பிறந்தாரைச் செல்வராகவும் காயா மரமாகவும் வறண்ட குளமாகவும்

கல்லாகவும் இருந்து பிறருக்கு ஈயாத மனிதரை ஏன் படைத்தாய் இறைவா ! திரிபுரங்கள் மூன்றையும் எரித்து எமனையும் காலால் உதைத்து ஏவல் கொண்ட திருவடிகளை உடையவனே ! எருதினைக் கொடியாகக் கொண்டவனே ! ஆற்றில் கரைத்த புளிபோல் ஆகிவிடாமல் என்னை ஆட்கொள்க என்றும் வேண்டுகிறார்.

உலகிலே பெண்ணாகத் தோன்றிய மாயப் பிசாசு என்னைப் பிடித்துக் கண்ணால் மயங்கச் செய்து மார்பு காட்டி மயக்கிக் கடிதடம் என்னும் குழியில் தள்ளி என் அறிவாகிய பொருளைப் பறித்த போது உன்னை எண்ணாது என்னை நானே மறந்து இருந்தேன் இறைவா என்று கடந்த கால நிலைக்கு இரங்குகிறார்.

அறுசுவை உணவுடன் இதமாகப் பேசும் பாங்கினை அறிந்தவர், உனைப் பிரிந்தால் நான் இறந்துபோவேன் என்பவர்கள், ஒன்றாய் இருந்து உண்பவர்கள், கைப்பொருள் கரைந்து போனால் போய் வாரும் என்று கூறித் தலையிலே ஒரு குட்டு வைத்து அனுப்புகின்ற பெண்களுக்குக் கொடுப்பார்; தலைவிதியை இறைவா என்னென்று சொல்லுவேன் என்று பெண்களின் பொய்யான அன்பை வெறுத்துப் பாடுகிறார்.

சிவகதையைச் சொல்லாதவர், நல்லோரிடம் கனவில் கூட மெய் பேசாதவர், பசித்து வந்தோர்க்கு அன்னமிடாப் பாவிகள், குருவின் சொல்லைக் கேட்டு அதன்படி வாழாதவர், அறத்தை மறந்தும் நினையாதவர் உன் திருப்பெயரை நினைக்கும் ஆற்றல் இல்லாதவர். இறைவனே ! இவர்கள் இருந்தால் என்ன ? இறந்தால் என்ன ? வானத்து அமுதின் சுவையறியாதவர், நல்ல கவியின் சுவையை எண்ணாதவர், ஞானமாகிய தேனின் சுவையை அறியாதவர்கள் இவற்றை என்று அறிவார்கள் என்று கச்சி ஏகம்பனிடம் கவலையோடு கேட்கிறார்.

நம்முடைய உடல் ஊற்றைச் சரீரம். ஆபாசங்கள் நிறைந்த கொட்டில். ஊனால் நிறைக்கப்பட்ட ஓட்டையுள்ள காற்றுத் துருத்தி. சோற்றால் நிரப்பப்பட்ட தோற்பை. காற்றால் நிரப்பப்பட்ட நிலையற்ற பாத்திரம். இத்தகைய பாத்திரத்தின் மீது நான் பற்றுவைத்து வீணாகத்

திரிந்து விட்டேன். இறைவா உய்ய வழி சொல் என்பது அவரது வேண்டுகோள்.

சொல்லால் வரும் சுற்றம் சிந்தனையால் உண்டான குற்றம் பொல்லாத தீவினையின் பார்வையால் பாவம் எது ? புண்ணியம் எது ? என்றறியாது ஆய்ந்து காணவும் வழியின்றி நான் செய்யும் அனைத்துப் பிழைகளையும் பொறுத்தருள வேண்டும் இறைவா ! என்று இறைஞ்சுகிறார்.

பெண்ணாசையைத் தவிர் மனமே என்பது பட்டினத்தாரின் வேண்டுகோள்களுள் முக்கியமான ஒன்று. அதனையும் கீழ்க்காணும் முறையில் பேசுகிறார். மஞ்சளை எண்ணெய்யில் இட்டு முகத்தை மினுக்கிக் காட்டி பித்தளைக் காதோலையைத் தங்கம்போல் துலக்கிப் பட்டப்பகலில் வெளிமயக்கத்தைச் செய்து வரும் பாவையர் மேலுள்ள ஆவலை இறைவனே நீ தான் நீக்க வேண்டும்.

அடுத்ததாக என்னை ஏன் படைத்தாய் ? இறைவா ! என்ற ஒரு வினாவை எழுப்பிக் கொண்டு அதற்கு அவரே பதில் உரைக்கின்றார். இந்த உலகிலே பிறந்து நோய்வாய்ப்பட்டு மெய்ப்பொருளைக் காட்டும் பேரின்பத்தை மறந்து சிற்றின்பத்தில் உழன்று அற்பமாதர் இடையில் கலந்து தடுமாறிப் பொன்தேடி அலைந்து பெற்ற பொன்னை அவர்க்குக் கொடுப்பதைத் தடுப்பாய் இறைவா ! என்று மனமுருகி வேண்டுகிறார்.

பூதங்களை மறந்து ஐம்பொறிகளை மறந்து வேறுபாடு முதலான பண்பினை மறந்து பின் முன் அற்றுக் காரண காரியங்களும் அற்று உன்னுடைய ஆனந்தக் காட்சியைக் கண்டு திளைத்திருப்பேன் இறைவா ! அத்தகைய அருளை எனக்கு நீ வழங்குக ! என்று வேண்டுகிறார்.

இறைவா ! உன்னிடத்தில் நான் ஒரு விண்ணப்பத்தை வேண்டுகிறேன். ஞானமில்லாப் பொல்லனாக விளங்கும் என்னைக் கொன்று போடுக. செய்ய வேண்டிய பொழுதில் உன்னை முறைப்படி வழிபட்டுப் பல்வகைத் தோத்திரங்களும் சொல்லிய பின்னர் என்னைக் கொன்று போடுக ! என்று வேண்டுகிறார்.

இறைவனே ! உடலாகிய கடத்துக்கு இரை வேண்டிப் பலவுயிர்களைக் கொன்று தின்று இறுமாப்பினால் மிக மெலிந்து பாவையரைக் கைப்பற்றி நமன் நம்மைக் கொல்லுங்கால் என்ன செய்வர் ?

நாறும் உடலினை நரி தின்னஉள்ள பொதியினைத் தினமும் சோறாலும் கறியாலும் நிரப்பிய பாண்டத்தைக் குருதியும் மலமும் நீரும் வழிகின்ற குழியில் விழாது ஏறும்படி அருள்வாயாக இறைவா ! மறைவாக அரண்மனைக்குள் புகுந்து திருடிய துட்டர்கள் வந்து மன்னரைக் கேட்பது போல் சிவநிந்தை செய்து குரு இலிங்கம் முதல் அடியவரையும் நிந்தித்துப் பெருத்தவர்க்கு நான் என்ன சொல்லுவேன்.

இறைவா ! கச்சி ஏகம்பனே ! விருந்தாக வந்தவர்க்கு அன்னமிடப் பொறுக்காதவர் உன் நாமத்தை நித்தம் ஓதி உண்ணாமலை பங்கராகிய அண்ணாமலையாராகிய உம்மை இப்புவியில் எண்ணாதவர் இருந்தால் அது எவ்வாறு நடக்கும் ?

இறைவா ! அனைத்தையும் படித்தறிந்தும் உள்ளபடி வல்லவனாக இருந்தும் நீயே வல்லவன் என்பதை உணராது மதிமயங்கிச் சொல்லாது விதியின் காரணமாகத் துக்கமுற்றது எல்லாம் சிவன் செயலே; பொன்னையே எண்ணி அதனை வெகுவாகத் தேடி உருகுவார் உலகில் உன்னை நினைத்து வழிபடார். இத்தகைய உலுத்தர்கள் அனைவரும் இருந்து என்ன பயன் ? இறைவா ! கடுஞ்சொல் பேசும் வம்பரை, ஈனரைக் குண்டரைக் காமுகரை, கொடும்பாவம் செய்யும் நிர்மூடரை இந்த உலகில் நெட்டைப்பனை போல வளர்ந்து நல்லோரின் வழியை அறியாது திரிவாரை ஏன் படைத்தாய் ?

இறைவா ! கச்சி ஏகம்பா ! அநேக உயிர்களை எல்லாம் கொன்றேன். அவற்றைக் கொன்று கொன்று தின்றேன். அதுவுமின்றித் தீங்கு பலவற்றையும் செய்தேன். அதனால் உன் சன்னதி முன் நின்றேன். உன்னையே நம்பி வந்த என் குற்றத்தை நீ பொறுக்க வேண்டும்.

இறைவா ! ஊர் பலவும் இருந்தென்ன ? உதவி செய்வார் பலபேர் இருந்தென்ன ? பெற்ற தாய் இருந்தென்ன ? இளையபெண் மனையாக இருந்தென்ன ? நல்லவர்கள் இருந்தென்ன ? சீர் இருந்தென்ன ? சிறப்பு இருந்தென்ன ? இத்தேசம் அழகாக இருந்தென்ன ? வல்லவனாகிய நீ இல்லாவிடில் இவற்றால் என்ன பயன் ?

இறைவா ! உன்னை விசயன் வில்லால் அடித்தான். கண்ணப்பன் செருப்பால் மிதித்தான். சாக்கியன் கல்லால் எறிந்தான். வண்டுகள் மதுவுண்டு களித்தாடும் சோலைகளை உடைய தில்லை அம்பலவாணரே ! உனக்கு ஒரு அன்னையும் பிதாவும் இல்லாமையினால் அன்றோ இவ்வாறு நேர்ந்தது. இறைவா ! மனிதன் பல பிறப்புக்களை எடுக்கின்றான். ஆதலால் ஒருவனுக்கு அன்னை எத்தனை பேர் ? அப்பன் எத்தனை பேர் ? மனைவியர் எத்தனை பேர் ? பிள்ளைகள் எத்தனை ? முன் பிறவி எத்தனை ? மூடனாகிய அடியவன் அதனை உணர்ந்திலேன். இன்னும் எத்தனை பிறவிகள் உள்ளனவோ ? ஏகம்பனே ? அறியேன். இவற்றால் நிலையாமை வலியுறுத்தப் பெற்றது. சில பாடல்கள் கீழே.

மயானம் குறுகுவரோ
கட்டிய ணைத்திடும் பெண்டிரும் மக்களும் காலத்தச்சன்
வெட்டி முறிக்கும் மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி அழுவார் மயானம் குறுகிஅப்பால்
எட்டி அடிவைப்ப ரோஇறைவா கச்சிஏ கம்பனே !
எல்லாம் வெளிமயக்கே
நல்லோர் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோஅக மும்பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழில்உடம்பும்
எல்லாம் வெளிமயக்கே இறைவா ! கச்சிஏ கம்பனே !
ஏன் பிறந்தேன் ?
பொல்லா தவன்நெறி நில்லாத வன்ஐம் புலன்கள்தமை
வெல்லா தவன்கல்வி கல்லாத வன்மெய் அடியவர்பால்
சொல்லா தவன்உண்மை சொல்லாத வன்நின் திருவடிக்கன்பு
இல்லா தவன்மண்ணில் ஏன்பிறந் தேன்கச்சி ஏகம்பனே !

என்ன கொண்டு வந்தேன் ?

பிறக்கும் பொழுது கொண்டுவந்த தில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொண்டுபோவ தில்லை இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வச்சீ வன்தந்த தென்று கொடுத்தறியாது
இறக்கும் குலாமருக்கு என்சொல் லுவேன்கச்சி ஏகம்பனே !

பிழை பொறுத்தருள்வாய்

கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே !

என் உடல் இரையாவது எதற்கோ ?

வரிக்கோல் வேல்விழி யார்அனு ராக மயக்கில்சென்று
சரிக்கோ துவேன்எழுத் தஞ்சும் சொலேன் தனியேனுடலம்
நரிக்கோ ? கழுகு பருந்தினுக் கோவெய்ய நாய்தனக்கோ
எரிக்கோர் இரைஎதற் கோஇரை வாகச்சி ஏகம்பனே !

ஏகம்பனே ! நின்தாள் சதம்

ஊரும் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளும்
சீரும் சதமல்ல செல்வம் சதமல்ல தேசத்திலே
யாரும் சதமல்ல நின்தாள் சதம்கச்சி ஏகம்பனே !

என் சென்மம் எத்தனையோ ?

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ ?
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ ?
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ ?
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ ?
முன்னை எத்தனை எத்தனை சன்மமோ ?
மூட னாய்அடி யேனும் அறிந்திலேன்
இன்னம் எத்தனை எத்தனை சன்மமோ ?
என்செய் வேன்கச்சி ஏகம்ப நாதனே !

(தொடரும்...)

# வள்ளுவமும் வாழ்வியலும் - ஒப்புரவு அறிதல்

(ம. கார்மேகம்)

வான்புகழ் வள்ளுவரின் திருக்குறள் உலகப் பொதுமறையாகப் போற்றப் பெறுகின்றது. இதற்குக் காரணம், என்றென்றைக்கும் தேவையான வாழ்வியல் கருத்துக்களை அது கூறுவதேயாகும். திருக்குறள் அறத்துப்பாலில் உள்ள ஒப்புரவு அறிதல் என்ற அதிகாரத்தில் வள்ளுவர் வாழ்வியலுக்கு இன்றியமையாத ஒப்புரவறிதலைப்பற்றிப் பேசுகிறார். இவ்வதிகாரம் தீவினை அச்சத்திற்குப்பிறகும் ஈகைக்கு முன்பாகவும் வைக்கப்பட்டுள்ளது. தீய செயல்கள் செய்ய அஞ்சுதல் வேண்டும் என்று கூறி முடித்த பின்னர் இனிச் செய்ய வேண்டியது என்ன என்று விளக்கவே இதனை அடுத்து வைத்துள்ளார். வறியவராய் ஏற்றார்க்கு மறுக்காமல் கொடுத்தல் என்பதே ஈகை என்று கருதியதால் உலக நடையை அறிந்து தாமாகச் செய்யப்படும் தன்மை கொண்ட ஒப்புரவினை ஈகைக்கு முன் வைத்துள்ளார்.

ஒப்புரவு அறிதல் என்பது உலக நடையை அறிந்து செய்தல் என்று பரிமேலழகர் விளக்குவார். உலகநடை என்பது தாமே அறிந்து செய்யும் தன்மை உடையது என்று விரித்துரைக்கிறார். ஒப்புரவு அறிதல் அதிகாரத்தில் முதன் மூன்று பாடல்களில் ஒப்புரவினது சிறப்பையும், நான்காவது குறளில் ஒப்புரவு செய்யாவிட்டால் வரும் பிழை பற்றியும், அடுத்த மூன்று குறள்களில் ஒப்புரவாளனுடைய செல்வம் பயன்படுகின்ற தன்மையையும், அதற்கடுத்த இரு பாடல்களில், வறுமை ஏற்பட்டாலும் ஒப்புரவு அழியாது என்பதனையும் பத்தாவது குறளில் ஒப்புரவினால் ஒருவனுக்குக் கேடு வருவதில்லை என்பதையும், கூறுகிறார் வள்ளுவர்.

இனி ஒப்புரவு அறிதல் அதிகாரச் செய்திகளைக் காணலாம். உலகத்து உயிர்கள் வாழ்வதற்கு மேகம் பொழிகிறது; அது தன்னிடத்தே சேர்த்து வைத்த நீர்த்துளிகளை இந்த உலகத்து உயிர்களுக்குத் தந்து உதவுகிறது. ஆனால் அந்த மேகம், இவ்வுலக உயிர்களிடமிருந்து கைம்மாறாக எதனையும் எதிர்பார்ப்பதில்லை; உயிர்களும் மேகத்திற்குக் கைம்மாறு செய்வதில்லை; அதுபோல, இந்த உலத்தில் வாழும் பிற உயிர்களை அறிந்து, அவற்றின் நிலைகளை உணர்ந்து,

எந்தக் கைம்மாறும் கருதாமல் அவ்வுயிர்களுக்கு உதவுவது தான் ஒப்புரவு அறிதல் எனப்படும். இதனை,

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என் ஆற்றும் கொல்லோ உலகு"

என்று வள்ளுவர் கூறுகிறார். இவ்வுலகத்தில் தாமாகப் பிறர்க்கு உதவும் மனிதர்கள் வாழவேண்டும் என்பதனையே வள்ளுவர் வலியுறுத்துகிறார். முல்லைக்கொடி துயருறுவதைக் கண்ட பாரி வள்ளல் அக்கொடிக்குத் தேரினைக் கொடுத்தான் என்பதும் இக்கருத்தை விளக்குவதே ஆகும்.

மேகம் பொழிந்தபின்பும் தன்னளவில் ஓய்வுபெற்று விடுவதில்லை. அது ஓயாமல் உழைத்துக் கொண்டே இருக்கிறது; தன்னிடம் உள்ளதைக் கொடுத்த பின்பும், மீண்டும் நீர்த்துளிகளைச் சேர்ப்பதற்கு முயல்கிறது; முயன்று கொண்டே இருக்கிறது. அம்முயற்சியால் கிடைக்கும் நீர்த்துளிகளைத் தனக்கென வைத்துக் கொள்ளாமல் இவ்வுலகத்து உயிர்களுக்குக் கொடுக்கிறது. நீர்த் துளிகளைச் சேர்த்த உடனேயே வழங்கிவிடுகிறது. மனிதனும் எவ்வளவு முயன்று பொருள் சேர்த்தாலும், அப்பொருளைத் தான் உண்ணுவதற்கு மட்டுமே என்று வைத்திருந்து இழந்துவிடாமல் தகுதி உள்ளவர்களுக்கு உதவ வேண்டும். இங்குத் தகுதி உள்ளவர் எனப்படுபவர் பொருள் இல்லாது வறுமையில் வாடுவோர் ஆவர்.

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்கிறார் வள்ளுவர். முதல் குறளில் மேகத்தை ஒப்புரவாளனுக்கு உவமையாகக் கூறிய செய்தியினை, இரண்டாவது குறளில் முயற்சிக்குப் பொருத்தமாக அமைத்துப் பார்த்தால் மிகவும் சிறப்பாக அமைகிறது. மேகம், பிறர் உழைப்பால் பொருளைப் பெறுவதில்லை; தான் சேர்த்ததையும் தனக்கென்று வைத்துக் கொள்வதில்லை; தானே உழைத்துத் தேடியதைப் பிறர்க்குத் கொடுத்து விடுகின்ற பெருமை உடையது. எனவே, பிறர் உழைப்பை உறிஞ்சி வாழும் தன்மையில்லாமல், தம் உழைப்பால் கிடைத்ததை வைத்துக் கொண்டு தாமும் வாழ்ந்து பிறர்க்கும் கொடுத்துச் சிறக்க வேண்டும்., இத்தகைய

ஒப்புரவு போலப் பிறிதொரு நல்ல செயல் தேவர் உலகத்திலும் இல்லை. இந்த உலகத்திலும் இல்லை. என்கிறார் வள்ளுவர். கொடுப்பாரும் கொள்வாரும் இல்லாததால் தேவர் உலகத்தில் ஒப்புரவு என்பது இல்லை என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். இந்த உலகத்தில் எல்லோர்க்கும் ஏற்ற செயல் ஒப்புரவு ஒன்றே என்பதால் வேறு செயல்களை விட இஃதொன்றே நல்ல செயல் என்று கூறி ஒப்புரவு செய்ய அனைவரையும் வேண்டுகின்றார்.

"புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற"

என்பது குறள். மனிதன், தனிமனிதனாகவே வாழ்ந்துவிட முடியாது; வாழவும் கூடாது. இந்த உலகத்து உயிர்களோடு இணைந்து வாழ்தல் வேண்டும் அப்படி வாழ்ந்தால் தான் அவற்றின் இன்ப துன்பங்களை அறிந்து கொள்ள முடியும். அப்படி அறிந்து ஒப்புரவு செய்பவனாய் வாழும் போது தான் அவன் உயிர் வாழ்பவன் ஆகிறான். மனிதன் பிற உயிர்களின் மீது அன்பு செலுத்துவதன் மூலம் தான் இவ்வுலகில் அவன் வாழ்கிறான் என்பதை உணர முடியும். இல்லையேல் அவன் இருந்தும் பயனற்றவன் ஆகிறான் என்று ஆகிவிடும். அப்போது அவனை இவ்வுலகம் செத்தவனாகக் கருதும். பிற உயிர்கள் துன்புற்ற காலத்து, அதனை அறிந்து கொள்கின்ற மனப்பக்குவம் இல்லாதவன் ஒப்புரவாளனாக மாட்டான். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடுகின்ற பெருந்தகைமை மனிதனுக்கு வேண்டும் என்றார் வள்ளலார். அதுபோல, பிற உயிர்களின் துன்பங்களைக் காணுகின்ற போது அத்துன்பங்களைப் போக்கும் உணர்வும் அறிவும் வேண்டும். அந்த உணர்வும் அறிவும் இல்லை என்றால் அவன் செத்தவனாகக் கருதப்படுவான். இதனை

"ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும்"

என்று வள்ளுவம் கூறுகிறது. வெறும் நூலறிவு மட்டுமே அறிவாகிவிடாது. உலகச் செய்திகளையும் பிறவற்றையும் பற்றித் தெரிந்து கொள்வதும் அவற்றைப் பற்றி பேசுவதும் அறிவு ஆகாது : அறிவு என்பது என்ன ? வள்ளுவரே விளக்கம் தருகிறார். பிற உயிர்களின் துன்பத்தையும் தன் துன்பம் போல் கருதுவதே உண்மையான அறிவு என்று கூறுகிறார். இல்லையேல் எத்துணை

அறிவு பெற்றிருந்தும் பிறர் துன்பத்தைத் தன் துன்பம் போல் கருதுவது இல்லையென்றால் அந்த அறிவினால் பயனில்லை என்கிறார்.

"அறிவினான் ஆகுவது துண்டோ பிறதின்நோய்
தந்நோய் போல் போற்றாக் கடை"

என்பது குறள். எனவேதான் ஒத்தது அறிவான் என்றும் பேரறிவாளன் என்றும் ஒப்புரவாளனை வள்ளுவர் குறிக்கிறார்.

ஓர் ஊரில் வாழுகின்ற மக்கள் தாம் உண்ணுதற்கு வேண்டிய தண்ணீரை, அந்த ஊரில் உள்ள ஊருணிக்குச் சென்று கொண்டு வருவதைக் காணலாம். அந்த ஊருணியில் நீர் நிறைந்திருக்குமே யானால் மக்கள் எந்தத் தொல்லையும் இல்லாமல் நீரைக் கொண்டு வருவார்கள். தன்னிடம் நீர் நிறைந்து உள்ளது என்பதனை மக்களிடம் ஊருணி கூறுவதில்லை; அழைப்பதும் இல்லை. ஆனால் ஊருணியில் நீர் நிறைந்தபோது மக்கள் தாமாகவே தமக்கு வேண்டிய நீரை நீண்ட காலம் எடுத்துக் கொள்வதற்கு உதவியாக அது அமைகிறது. அதுபோல ஒப்புரவு செய்யும் பேரறிவு நிறைந்த ஒருவனிடத்தே செல்வம் இருக்குமேயானால் அச்செல்வம் மக்களுக்குப் பயன்படும். ஊருணி நீர் நெடுங்காலத்திற்கு, வீணாகாமல் மக்களை உண்பிப்பது போலப் பேரறிவாளனின் செல்வம் வீணாகாமல் பயன்படும். உலக நடையை அறியாதவனிடத்தில் செல்வம் தங்கினால் அது பிறர்க்குப் பயன்படாது. அவனுக்கும் பயன்படாது.

"ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு"

என்பது குறள். ஊரின் நடுவில் ஒரு மரம்; அது பயனற்ற மரமாக இருந்தால் மக்கள் அதை ஒரு பொருட்டாக எண்ணுவதில்லை. சில நேரத்தில் அது தமக்கு இடையூறாக இருக்கும் என்று கருதி அப்புறப்படுத்தி விடுவர். பயனற்ற மரமாக இருப்பினும் பரவாயில்லை. துன்பம் தரக் கூடியதாக இருந்தால் அதனை உடனே நீக்கிவிடுவார்.

இதுவோ பயன் தரும் மரம்; ஊரின் நடுவே உள்ளது. எல்லா வகையாலும் பயன்தரக் கூடிய இந்த மரத்தின் பழங்கள் மிகுதியாகப் பழுத்திருந்தால் மக்கள் அதனால் பயன் பெறுவர். ஊரின் நடுவே என்பதால் அனைவரும் எளிதில் சென்று பயன்பெறக் கூடிய நிலை

உண்டாகும். அதுபோல, ஒப்புரவாளனிடத்தில் செல்வம் அமையுமேயானால் அச்செல்வம் எளிதில் எல்லோருக்கும் பயன்தரும்.

பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற் றால் செல்வம்
நயன் உடையான் கட் பெறின்

என்கிறார் வள்ளுவர்.பயன் தருகின்ற பழுத்த மரத்தை நாடிப் பறவைகள் செல்வது போல, மக்கள் எளிதில் சென்று உறுதியாகப் பொருளைப் பெறுகின்ற நிலை இது. இன்னொரு மரம் மருந்தாகப் பயன்படுகிறது. அந்த மரத்தில் எந்தப் பகுதியை வேண்டுமானாலும் மருந்துக்கு எடுத்துக் கொள்ளலாம். அம்மரத்தில் மருந்தாகப் பயன்படாத பகுதியே இல்லை. அதில், மக்கள் அனைவரும் வந்து மருந்துக்கு வெட்டி எடுக்கின்ற போது, அம்மரம் தன் வருத்தம் பார்ப்பது இல்லை; பிறர் வருத்தத்தைத் தீர்க்கின்ற நிலையில் பயன்படுவது ஒன்றே அதற்கு மேன்மை தருகிறது. அதுபோல, ஒப்புரவாளனிடத்தே செல்வம் சேர்ந்திருந்தால், அச்செல்வம் பலவகையாலும் பிறர் துயர் தீர்க்கப் பயன்படும். இதனை,

"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்"

என்று வள்ளுவர் கூறுகிறார். ஏதேனும் ஒரு பழக்கத்தைக் கைக் கொண்டிருப்பவன் அப்பழக்கத்தை நிறுத்துவதென்றால் மிகவும் துன்பப்படுவான். செய்யத்தகாத செயல்களைப் பழக்கமாகக் கொண்டவர்கள்கூடத் தாம் வறுமையுற்ற காலத்திலும் அப்பழக்கத்தைக் கைவிட முடியாமல் தவிப்பதைக் காண்கிறோம். தீய பழக்கமே இவ்வாறு என்றால்! உயர்ந்த பழக்கமாகிய ஒப்புரவினைச் செய்பவர் எவ்வாறு இருப்பர் ? ஒப்புரவாளர்கள் தம்மிடம் உள்ள செல்வம் சுருங்கிய காலத்திலேயும் அச்செல்வம் சுருக்கமாக உள்ளதே என்று கருதமாட்டார்கள்; கவலை கொள்ளாமல் தாம் செய்யத் தகுந்த செயல்களை அறிந்த ஒப்புரவாளர்கள், தம் செயல்களைச் செய்வதற்குத் தளரமாட்டார்கள். அதாவது, அவர்கள் வறுமையுற்றபோதும் ஒப்புரவு செய்யத் தயங்குவதில்லை. இதனை

"இடனில் பருவத்தும் ஒல்கார் ஒப்புரவின்
கடனறி காட்சி யவர்"

என்கிறார் வள்ளுவர். இவ்வாறு பிறர்க்கு உதவுகின்ற காரணத்தால் ஒப்புரவாளன் வறுமையடைவதில்லை என்பதையும் உணர்த்துகிறார். அவன் செய்யத்தக்க செயலாகிய ஒப்புரவினைச் செய்யாமல் இருப்பானேயானால் அதுதான் அவனுக்கு வறுமையாகிய செல்வத்தை இழந்து நிற்கின்ற வறுமை, வறுமையாகாது. இதனை,

"நயன் உடையான்"
என்று வள்ளுவர் உணர்த்துகிறார்.

மனித வாழ்க்கையில் கேடுகள் பல வழிகளில் வந்து கொண்டிருக்கின்றன. எத்தனையோ தீய வழிகளில் பொருளை இழந்து மனிதன் கேடுற்று நிற்கிறான். ஆனால் ஒரு மனிதன் பிறர்க்கு உதவி செய்கின்ற காரணத்தால் பொருளை இழந்து நிற்கும் கேடு வரும் என்று ஒருவன் கூறுவானேயானால் அது தவறாகும். அவ்வாறு வரும் கேடுகளை, ஒருவன் தன்னை விற்றாவது பெற்றுக் கொள்ளக்கூடிய பெருமை உடையது. ஏனென்றால் அது கேடாகக் கருதப்படமாட்டாது. இதனை,

"ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொறுவன்
விற்றுக் கோள் தக்க துடைத்து."
என்கிறார். விருந்தினரை வரவேற்று, உண்ணச் செய்து, அவர்கள் உண்டது போக எஞ்சியதை உண்பவனுடைய நிலத்தில் விதையும் இட வேண்டியதில்லை என்பார் வள்ளுவர். அவனுடைய நிலம் தானாகவே எல்லா உரமும் வளமும் பெற்று விளைந்து பயன்தரும். அதுபோல, ஒப்புரவாளன் தன்னுடைய செல்வத்தைப் பிறர்க்குக் கொடுப்பதால் அது குறையாமல் அச்செயலே அவனுடைய செல்வம் பெருகுவதற்குரிய காரணமாக அமைகிறது. இருந்ததைக் கொடுத்து விட்டுக் கேடுற்று நிற்கிறானே என்று பிறர் கூறுவர் என்பதற்காக அஞ்ச வேண்டியதில்லை என்று கூறி, ஒப்புரவின் சிறப்பினைப் புலப்படுத்துகிறார்.

இந்த அதிகாரச் செய்திகளைத் தொகுப்பாக நோக்கினால் மனிதன் இவ்வுலக வாழ்வியலை அறிந்தவன் ஆதல் வேண்டும் என்பது பெறப்படுகிறது. அதனால் அவன் உலக நடையை அறிந்து கைம்மாறு வேண்டாமல் மேகம் போல் பிறர்க்கு ஒப்புரவு செய்தல் வேண்டும்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**